மா பஞ்சம்! கவனியுங்கள் கொஞ்சம்!!

1

சோதி சொருபமே துணை.

# Vedanta Baskaran

## FIRST PART.

# வேதாந்த பாஸ்கரன்

முதற்பாகம்.

482
2.18

By

Sri Karunaiyananthar

First Edition.

1918.



PRICE ONE RUPEE.

சோதி சொரூபமே துணை.

# வேதாந்த பாஸ்கரன்

முதற்பாகம்.

---




நாகபட்டினம் தாலுக்கா கீழ்வேளூர் நிவாஸியாகிய

பெருநாழி,

ஸ்ரீ கருணையானந்தர் அவர்களால்

இயற்றப்பெற்றது.

(இந்நூல் பக்குவிகட்கு மாத்திரம்)

---

முதற்பதிப்பு.

---


பேரளம் திருமீயச்சூர்

பிர்ம்ம வித்தியா அச்சுக்கூடத்தில்

அச்சிடப்பெற்றது.

1918.


 [விலை ரூபாய் ஒன்று.

# நூலினுட்பிரிவு.



இரங்கோன், தப்பிக்கான் வாசியும், இந்நூலாசிரியரின்

மாணவர்களிலொருவருமாகிய

## க. கு. குழந்தைச்சாமிபிள்ளை அவர்களியற்றியது.

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தக்கசா தனச திட்டய மேயோர்
சடமெடுத் ததுவென வயங்கும்
பக்குவ ரெனும்பைங் கூழ்க்கு வேதாந்த
பாஸ்கரன் எனுமழை பொழிந்த
கக்குறை தவிர்க்கும் அற்புத முகிலே
கருணையா னந்தகண் மணியே
சற்குண நிதியே சிற்பர வடிவே
சமரச ஞானதே சிகனே.

ஔவை.

சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதா ரிழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி.

## இந்நூலை அச்சியற்றும்படி தனோபகாரம் புரிந்தவர்கள் பெயர், ஊர், முதலியன.

| | | | |
|---|---|---|---|
| மகா-ள-ள-ஸ்ரீ. | அ. அருணாசலமுதலியார் அவர்கள், | கீழ்வேளூர். | 20 |
| ,, | சு. விருத்தாசலம் பிள்ளை அவர்கள், | கோடிமங்கலம். | 20 |
| ,, | ரா. சா. வீரப்பபிள்ளை அவர்கள், | திருமதிக்குன்னம். | 25 |
| ,, | K. சுப்பையா முதலியாரவர்கள், | குருக்கத்தி. | 10 |
| ,, | அ. சுப்பையா பிள்ளை அவர்கள், | புலிவலம். | 10 |
| ,, | எ.ராம.அ. எல்லப்பசெட்டியார் அவர்கள், | புலிவலம். | 11 |
| ,, | ரெ. இராமையாபிள்ளை அவர்கள், | புலிவலம். | 10 |
| ,, | S. V. S. அண்ணாமலை வயித்தியரவர்கள், | விஜயபுரம். | 10 |
| ,, | S. இராமசாமி பிள்ளை, அவர்கள், | பட்டமங்கலம். | 5 |
| ,, | S. பிச்சு முதலியார், அவர்கள், | கீழ்வேளூர். | 5 |
| ,, | சி. சுப்பிரமண்யபிள்ளை, அவர்கள், | நாகப்பட்டணம். | 5 |
| ,, | மு. அ. முஹம்மது உசேன்சாயபவர்கள், | கீழ்வேளூர். | 4 |
| ,, | சொக்கப்பா முதலியார், அவர்கள், | கூத்தூர். | 3 |
| ,, | ப. உ. செய்யதலி சாயபு அவர்கள், | கூத்தூர். | 3 |
| ,, | ஒ. கா. செய்குதாவூது சாகிபு, அவர்கள், | கூத்தூர். | 3 |

### கையொப்பக்காரர்கள்.

| | | | |
|---|---|---|---|
| ,, | க. மு. உஸன்ஹான் சாஹிபு, | ஆழியூர். | 2 |
| ,, | வா. தா. ஹமீதுசுல்தான் ரூவுத்தர், | ஆழியூர். | 2 |
| ,, | து. சிவசுப்பிரமணிய பிள்ளை, | கீழ்வேளூர். | 2 |
| ,, | மு. மதாறுசாரூவுத்தர், | கீழ்வேளூர். | 2 |
| ,, | முருகைய பிள்ளை. வளையற்கடை, | விஜயபுரம். | 2 |
| ,, | ப. வைத்திலிங்கம்பிள்ளை, | கீழ்வேளூர். | 2 |
| ,, | ச. ரா. முத்தைய செட்டியார், | கீழ்வேளூர். | 2 |
| ,, | விசுவலிங்கம்பிள்ளை, | திருமதிக்குன்னம். | 2 |
| ,, | சோமசுந்தர முதலியார், | கூத்தூர். | 2 |
| ,, | ச. சிதம்பரவயித்தியர், | கீழ்வேளூர், | 2 |
| ,, | மு. நெயினாமுஹம்மது சாஹிபு, | ஆழியூர். | 1 |
| ,, | அ. சதாசிவ முதலியார், | திருக்கண்ணன்குடி. | 1 |
| ,, | சோ. சுப்பராய முதலியார், | திருக்கண்ணன்குடி. | 1 |
| ,, | வீ. கோவிந்தசாமி செட்டியார், | ஆழியூர். | 1 |
| ,, | தி. சின்னசாமி அய்யங்கார், | திருக்கண்ணன்குடி. | 1 |
| ,, | மாணிக்கம் பிள்ளை, | பட்டமங்கலம். | 1 |
| ,, | கா.மு. செய்யதுமுஹம்மது தாவூதுசாஹிபு, | ஆழியூர். | 1 |
| ,, | சி. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, | கோடிமங்கலம். | 1 |
| ,, | கிருஷ்ணபிள்ளை, | திருமதிக்குன்னம். | 1 |
| ,, | சேவுபிள்ளை, | புலிவலம். | 1 |
| ,, | ரா. சுப்பிரமணிய பிள்ளை, | கீழ்வேளூர். | 1 |
| ,, | மா. கோதண்டராம பிள்ளை, | கீழ்வேளூர். | 1 |

7



சோதி சொரூபமே துணை.

# முகவுரை.

நெடிய கடல்சூழ்ந்த இந்நிலவுலகின்கண் "எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதான் இயாதினும் அரிதரிதுகாண்" என்னுந் தாயுமானப் பெருமான் அமுத வாக்கியத்திற்கிலக்காக விளங்கும் அளவிறந்த ஆன்ம கோடிகளுட் கிடைத்தற்கரிதாகிய இம்மானிட யாக்கையே ஒப்பிகந்து சாலவுஞ்சிறந்தது.

அத்தகைய அருமையான இந்தச்சரீரம் அவரவர்கட்குக் கிடைக்கப் பெற்றிருந்தும், ஓர் வீரன், பகைவர்கள் சரீரத்தைத் துணிப்பதற்காகத் தன் கையில் தாங்கிய வாளாயுதத்தால் தன்னுடலைத் துணித்துக்கொள்ள முயல்வதைப்போல், அநித்தியமான ஈடணைத் திரவியங்களைப் பெரும்பாலும் கருதுகிறார்களேயன்றி,

சிவஞான வள்ளல்.

உலகநெருப்பைக் கடந்தொழியா ஞானவுததி மடுப்பேனோ!
இலகுகுடும்பத் துயர்நீங்கி யெங்ஙாட்டுறவி யாவேனோ!
திலகமறையின் பொருளிதெனத் தேற்றுங்குரவற் காண்பேனோ!
கலகவுடலப் பிணிதணந்து கடவுள்தனையான் காண்பேனோ.!

என்னுங் கருத்திற்கு நிகராக, நான் யார்? நான் உலகத்திற் பிறக்கவேண்டிய காரணமென்ன? எனக்கு இந்தச் சரீரம் எதற்காகக் கிடைத்தது? இந்தத்துக்க சம்சாரசாகரம் வந்ததேன்? இராட்டினத்தின் சுழலைப்போல் நீங்காத ஜனனமரணங்கள் வரவேண்டியது யாது காரணம்? அவற்றைத் தவிர்ப்பதற்கு என்னவுபாயஞ் செய்யவேண்டும்? ஞானசிரியரை எவ்வாறு நாம்

அடைவது? என இடையறாத ஆத்மவிசாரந் தலைப்பட்டு, தனக்கு அந்நியமான புறக்கருமங்களைத் தணந்து, தனது எதார்த்த சொரூபத்தை அனவரதமும் நோக்காமல் நோக்கி, நித்யானந்த சைதன்ய விதேக கைவல்யத்தை நாம் எப்போது சேருவோமெனக் கருதுபவர்கள்; கோடியில் ஒருவராவது, இக்காலத்தில் இருக்கின்றார்களெனக் காணுவது, மிகவும் அருமையாக இருக்கின்றது.

சிவஞான வள்ளல்.

மருவிய வுடல்வெறுப்பும் வையக வெறுப்பும்வந்தால்
இருவினை யொப்புமங்க ணெய்திடும் எய்துங்காலை
கருமல பாகமுண்டாம் பாகத்தாற் கடிதிற்சேருந்
திருவருட் சத்திபாதஞ் செறிந்திடுங் குருவுமன்றே.

மேற்கூறிய இருவினையொப்பு மலபரிபாக சத்திநிபாதமுண்டாகும்படி, எல்லாம் வல்ல சித்தர்களாகிய சுப்பிரமணியர், அகஸ்தியர், திருமூலர், சட்டமுனி, நந்தீசர், உரோமர், போகர், திருவள்ளுவர் முதலிய நவகோடிசித்தர் குழாங்களும், மாணிக்கவாசகர், பட்டினத்தடிகள், சிவஞானவள்ளல், தாயுமானவர், குணங்குடி மஸ்தான்சாகிபு, தற்கரைப் பீர்முகம்மதுசாகிபு, வடலூர் இராமலிங்க வள்ளல், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், சாந்தலிங்க சுவாமிகள், குமாரதேவர் முதலிய பேரின்ப மஹான்களும், ஜீவகாருண்யம் பாவித்து, லோகோபகாரமாக, எனையோர்களும் சாயுச்யபதவி அடையும்பொருட்டு, மொழிக்குமொழி தித்திக்கும் மதுரமொழுகிய அழகிய அநேக திருப்பாசுரத் தொகுதிகளைத், திருவாய்மலர்ந்தருளி வெளியிட்டிருக்கின்றார்கள்.

அத்தகைய சிறந்த சாஸ்திரங்களை வாங்கி வாசிப்பவர்களோ, இக்காலத்தில், மிக அருமையாகச் சிற்சிலர்களே காணப்படுகிறார்கள்: அங்ஙனம் வாங்கி வாசிப்பினும், எம்போலியர்கட்கு, அந்நூற்களின் ஆழ்ந்த கருத்துகள் செவ்வனே விளங்குவதில்லை. அக்குறையை நீக்கக்கருதி, இக்காலத்தில் வேதாந்த சித்தாந்த சாஸ்திரங்களை வசனரூபமாக வெளியிட்டிருப்பவர்களோ; அவர்களால் எழுதிய சாஸ்திரங்களைப் பார்ப்போர், பிற

ருதவியின்றித் தெரிந்துகொள்ளாத விதமாயும்; நிகண்டு, அகராதி முதலிய இலக்கிய நூற்களைத் தேடிப்பார்த்துணரும் விதமாயும், தான் கற்ற கல்விப் பாண்டித்துவத்தைப் பிறருக்குத் தெரிவிக்கக் கருதியோ? அல்லது அவர்கட்கியற்கையாயுள்ள தமிழ்ப் பாஷாலட்சணமோ? கற்கண்டு என்னும் பதத்திற்கு, கன்னற்கட்டி எனவும்; நேற்று என்பதற்கு, நெருநல் எனவும்; தாமரை என்பதற்கு; இண்டை, குசேசயம், சதபத்திரி, சூது, பற்பம் எனவும்; பொன் என்பதற்கு, அரி, அத்தம், இரணியம், தேசிகம், ஆடகம் எனவும்; எஞ்ஞான்று, நிற்புழி, வந்துழி, அண்மை, சேய்மை, இவைபோன்ற கர்னகடூரமான பதப்பிரயோகங்களைச் சாஸ்திரமுழுவதும் சரமாரியாக உபயோகித்து வரைந்து வெளியிட்டிருக்கின்றார்கள். அத்தகைய நூற்கள், மிகுந்த இலக்கிய, இலக்கணப் பயிற்சியுள்ளவர்கட்கன்றிச், சாமான்யர்கட்கு நன்குவிளங்குவது அசாத்தியம்.

இதுகாரணத்தை யுத்தேசித்துப், பெரும்பாலும் கடின சந்திகளும், கடினமான வாக்கியங்களும் வராமல் சாமான்ய கல்வியறிவுடைய ஆண்பெண் இருபாலரும் எளிதிலுணருமாறு வசனரூபமாக ஓர் சாஸ்திரம் எழுதி வெளியிடவேண்டும் என்னும் அவாவானது சிறிது காலத்திற்குமுன் எனக்கேற்பட்டிருந்ததனாலும்,

பிரபுலிங்கலீலை.

கன்றிய வைரிகள் காதுங் காதையும்,
வன்றுயர் மதனநோய் வளர்க்கு மாற்றமும்,
புன்றொழி வினர்வறும் பொழுது போக்கலும்,

என்று சொல்லாநின்ற யுத்த சரித்திரங்களும், மதனாகமங்களும், கட்டுக்கதை (Novels) களும், இக்காலத்தில் எளிய தமிழ் நடையிலேயே எழுதப்பெற்றிருப்பதால், அவ்வித நூற்களை வாங்கி வாசிப்பவரும், வெள்ளிடை மலைபோல் நன்குணரும்படி, இனிய செந்தமிழ் நடையில், ஓர் வேதாந்த நூலைத் தாங்கள் எழுதி வெளியிடத்தான் வேண்டுமெனப் பல அன்பர்கள் சதா என்னைக் கேட்டுக்கொண்டு வந்ததனாலும்; அன்பர்கள் வாக்கி

யத்தை மறுக்கமுடியாததனுலும், என் சிற்றறிவிற்கெட்டிய வளவில் "அவசரக்கோலம் அள்ளித்தெளி" என்னும் பழமொழி போல் வெகு துரிதத்தில் இந்நூலை எழுதி, பக்குவர்களின் மனமாயையென்னும் அந்தகாரத்தை நீக்குவதனுல், இந்நூலுக்கு "வேதாந்த பாஸ்கரன்" என்னும் நாமகரணஞ்சூடி ஒருவாறு வெளியிடத் துணிந்தேன்.

இந்நூலிற் கூறப்பட்ட கருத்துக்கள் சர்வ சமயங்கட்கும் சகல ஞானுகமங்களின் கருத்துகட்கும் முற்றிலும் பொருத்தமாகவேயிருக்கும்; சிற்சில கருத்துக்கள் சில ஆகமபுராண இதிகாசங்கட்கு முரணுகக் காணப்படின் அஃதே பெரியோர்கள் கருத்தாதலால் யானும் அவ்வாறு வெளியிடலானேன்.

பல சாஸ்திரங்களையும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்த பெரியோர்களாகிய கல்விமான்கள்,

கைவல்ய நவநீதம்.

பொய்யை மெய்யென்ற மூடர் புண்ணியரென்று
 புராணங் கூப்பிடுமானுல்
மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள்
 விதித்த சாத்திரமுண்டோ?

மஹாராஜாதுறவு.

பொய்யை மெய்யன்றறிந்து போதமின் மையாலே
மெய்யைப்பொய் யென்றெண்ணி மெலிந்தேயுழல்வ ருலகர்
பொய்யைப் பொய்யென்றறிந்து போதகுருவி னருளின்
மெய்யை மெய்யென்றறிந்தே மெலிவுதீர்வ ருயர்ந்தோர்.

என்னும் அமிர்த வாசகங்களை யுணர்ந்து ஒப்புக்கொண்டிருப்பார்கள் ஆதலால், அங்ஙனமே எனது வாசகத்தையும் மிகையெனக் கருதமாட்டார்க ளென்பதற்கு, யாதோர் பிரமேயமுமில்லை.

இந்நூலை, இதனினும் மிக்கதெளிவாயும், நன்ருயும் எழுதலாமென்பது கல்விமான்களின் அபிப்பிராயமாயினும், அஃதென் சிற்றறிவிற்கியலாமையால்,

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினுற் போலுமே
கல்லார்தான் கற்ற கவி.

சோதி சொரூபமே துணை.

# வேதாந்த பாஸ்கரன்.

---

## பாயிரம்.

### பிரணவ சொரூப வணக்கம்.

வெண்பா.

வேதமறை நாலுணரா மெய்ப்பொருளா மெய்ஞ்ஞான
பாதமறை வேதாந்த பாஸ்கரனைப்—பூதலமே
லார்த்தருளு மாறறைய வன்னையென வென்னைக்கண்
பார்த்தருளுஞ் சோதிசொரூ பம்.

இதுவுமது.

முத்திதரு மத்துவித மோனநிலை தானுணரப்
பத்திதரும் வேதாந்த பாஸ்கரனை—வித்தகமாய்ச்
சாதப் பிரணவமேற் சாற்றிடவெற் காருதவி
சாதப் பிரணவமே தான்.

### மஹான்கள் பொதுவணக்கம்.

தாண்டற் கரியபவ சாகரத்தைப் பேரன்பாந்
தாண்டற் பஃறிகொடு தாண்டியசி—ராண்டகைசேர்
சித்தரடி யார்குழுபொற் சேவடியை யாவலுறப்
பத்தியுடன் புத்தியுள்வைப் பாம்.

### பிரதம குருப்பிதா வணக்கம்.

அறுசீர்க்கழி நெடிலடி விருத்தம்.

கத்துதிரைச் சலநிசூழ் புடவியிடைப் பலதவங்கள்
 கருதி யாற்றிப்
பத்தியுட னடியேனைப் புத்திரனு கப்பயந்து
 பலநூல் போதித்
தத்துவித வித்தையெனக் கறிவித்தந் நிலையிற்று
 னழுந்தி மாத
வத்திரஞ்சேர் அப்துர்றகு மானெனுமெய்ஞ் ஞானிபதம்
 வணங்கி வாழ்வாம்.

பாயிரம்.

13

மஹாகுருவணக்கம்.

வெண்பா.

அத்துவித வித்தாம் அவரையா நந்தகுரு
பத்திவழு வாமனிதம் பாவித்தான்—முத்தமிழுஞ்
சித்திகளு மெய்த்தவமுஞ் சேர்ந்துநமை வாழ்விக்கு
மெத்திறத்து மோர்பயமு மில்.

## சிறப்புப்பாயிரம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பத்திமிகு முத்திபெற நினைந்து வாடும்
பக்குவர்க ளெனும்பைங்கூழ் செழிப்புற் றோங்கத்
தத்துவமெய்ஞ் ஞானோப தேச மாரி
தனியறிந்து பொழியவந்த கருணை மேகம்
எத்தலமும் புகழ்செயுங்கீழ் வேளூர் வாழும்
எழில்முஹம்ம திபுறுஹீம் இயற்கை நாம
முத்தமிழ்க்கு வித்வசிரோன் மணியென் றன்றோர்
மொழிகருணை யாநந்தப் பெயர்பெற் றோனே.

அவையடக்கம்.

நத்தையிடை முத்துதித்தால் நல்லரச ரெள்ளாமற்
சித்தமகிழ்ந் தேமுடியிற் சேர்ப்பதுபோற்—சத்துகடா
னென்றமிழை யெஞ்ஞான்று மெள்ளுவரோ புன்றமிழென்
றின்றமிழென் றன்புறுவா ரே.

இந்நூற்கு வேதாந்தபாஸ்கரன் என்னும் பெயர் வந்ததற்குக் காரணமிஃதெனல்.

போதாந்த காரமிலார் புத்தியை மறைத்திருக்குந்
தீதாந்த காரமெலாந் தீர்ப்பதனால்—வேதாந்த
பாஸ்கரனென் றின்னூற்குப் பான்மையபி தானமுற்ற
தாஸ்திபிது பக்குவருக் காம்.

இந்நூற்பெருமை யிஃதெனல்.

எந்நூலு மிந்நூலுக் கீடல்ல வென்றுரைப்பார்
பன்னூலு நன்குணர்ந்த பாவலர்க—ணன்னூலாம்
வேதாந்த பாஸ்கரனை மிக்குணர்ந்தால் வேறில்லை
நாதாந்தம் வேதமொரு நால்.

என்னும் வெண்பாவிற் கிலக்கணமாகவும், காவேரி முதலிய நதிகட்கு முன்னே சிறிய வாய்க்கால்களும் ஓடிக்கொண்டிருப்பதுபோலவும் இந்நூலைச் சமர்ப்பிக்கலானேன்.

இந்நூலிற் பிரயோகிக்கப்பெற்ற வாக்கியங்கள் தமிழ்ப் பாஷா லட்சணப்போக்கின் உருவழகுக்கு விகற்பமாயிருப்பின் அவற்றையும், ஆங்காங்கு காணப்பெறும் பிழைகளையும், அவற்றின் திருத்தங்களையும் கற்றுணர்ந்த விவேகிகள் தயைபுரிந்து எமக்கறிவிப்பாராயின் மகிழ்வோடேற்று மறுபதிப்பில் திருத்தியச்சிடப்படும்.

இந்நூலை அச்சிடுவதற்கு வேண்டிய முயற்சிகள் செய்த கோடிமங்கலம். சு. விருத்தாசலம்பிள்ளை அவர்கட்கும், திருச்சி டிஸ்ட்ரிக்ட் கோர்ட் பிருசஸ்சர்வர் கிருஷ்ணசாமி நாயுடு அவர்கட்கும், மதுரை S. I. ரெயில்வே கண்ராக்ட் மேஸ்திரியார் குருநாதம்பிள்ளை அவர்கட்கும், புலிவலம் எ. ராம. அ. எல்லப்ப செட்டியாரவர்கட்கும், ரெ. இராமையா பிள்ளையவர்கட்கும், ஆழியூர். வா. தா. ஹமீது சுல்தான் ருவுத்தர் அவர்கட்கும், திருமதிக்குன்னம், ஜெ. கலியபெருமாள் நாயுடு அவர்கட்கும், கீழ்வேளூர். மு. இராஜகோபால நாயுடு அவர்கட்கும், K. இராமசாமிப் படையாச்சி அவர்கட்கும், இந்நூலைப் பற்றிய விளம்பரங்களைப் பல பத்திரிகை வாயிலாய் வெளியிட்ட திருமதிக்குன்னம் ரா. சா. வீரப்பபிள்ளை யவர்கட்கும், முசற்குளம். மா. வ. நடராசபிள்ளையவர்கட்கும், இந்நூலை எழுதும்போது இடைக்கிடையே யாம் சொல்வதை எழுதிக்கொடுத்த புலிவலம் தி. மு. ராம. தனுக்கோடியாபிள்ளை அவர்கட்கும், கீழ்வேளூர் K. கலியபெருமாள் பிள்ளை அவர்கட்கும் மறவாத நன்றியுடையவனாகவிருக்கின்றேன்.

இந்நூலை வாசிக்கும் அன்பர்கள் அன்னப்பட்சியானது பாலிற் கலந்தநீரைப் பிரித்துவிட்டுப் பாலைமாத்திரம் பருகுவதுபோலவும், பூவோடுசேர்ந்த வாழைநாரையும் அங்கீகரிப்பதுபோலவும், அத்துவிதச் செல்வர்களாகிய மஹான்களின் எண்ணிறந்த திருப்பாடல்களுக் கிடையே எனது புன்மொழியும் செறிந்திருப்பதால், அந்த விசேஷத்திற்காகவாவது இந்தநூலை அங்கீகரித்துக், குற்றத்தை நீக்கிக் குணத்தைக் கைக்கொள்வார்களெனப் பிரார்த்திக்கின்றனன்.

கீழ்வேளூர், }
பிங்களஹு தைமீ. } கருணையாநந்தன்.

இந்நூற்பயனித்தன்மைத்தெனல்.

மாயை யிருளில் வழிதெரியா மற்றிகைத்தாற்
றூயவொளி காட்டியதர் தோற்றிவிக்கு—நேயமுடன்
பார்த்தவர்க்கு வேதாந்த பாஸ்கரனைப் பாரார்க்கோர்
மாத்திரையும் ஞானமுண்டா மா.

இந்நூல் ஜனன மரணங்களைத் தவிர்க்குமெனல்.

பிறப்பகற்று மத்துவிதப் பேரின்ப நல்கு
மிறப்பகற்றும் வேந்தருங்கண் டேத்துஞ்—சிறப்புவிதிச்
சாந்தமுறும் வேதாந்த பாஸ்கரனைத் தான்பார்த்துக்
கூர்ந்துளத்தே தேர்ந்தறிவார்க் கு.

இந்நூலைக் கற்றுணர்ந்து அதன்படி நடப்பவர்க் கூழின்றெனல்.

பொய்ம்மையறுங் காமத்தைப் போக்குவிக்கு மெய்ஞ்ஞான
மெய்ம்மைவரு நல்லறிவு மேற்கொள்ளுந்—தெய்வமறை
வேதமெலாம் போற்றுமிந்த வேதாந்த பாஸ்கரனை
யோதிநடப் பார்க்கினியே தூழ்.

இந்நூலை மன்வோருமையுடன் வாசித்து அதன்படி நடப்பவர்கள் முன்
யோகம்பயின்று, விட்டகுறையை முடிக்கவந்தவர்களேயன்றிச்
சாதாரண மனிதரன்றெனல்.

கைக்குளின்பந் தாரபொய்யாங் காமநூற் கத்தைவிட்டு
மெய்க்குளின்பந் தாரவிந்நூல் வேதாந்தத்—திற்கருத்தை
வாதித்தி டாதகற்றி வாசிப்போர் யோகமுனஞ்
சாதித்து விட்டவர்க டான்.

பல சாஸ்திரங்களை ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தவர்களும் இந்நூலை
வாசிப்பதால் ஞான்வைராக்ய மேன்மேலு முடையவர்களாவாரெனல்.

பாரநூற் கற்றவரும் பார்த்துணரில் ஞானமகா
வீரவயி ராக்கியத்தை மேற்கொண்டு—காருணிய
வித்தாய் விளங்குமிந்த வேதாந்த பாஸ்கரனைச்
சத்தாய் விளங்கிடுவர் தான்.

இந்நூலைக் கருதாதவர்கள் பிரயோசனமடைய மாட்டாரெனல்.

பூதலத்தா ரோதுகின்ற புன்னெறியாஞ் சாத்திரங்கள்
வாதமிட்டுத் தர்க்கித்து வாய்வீணா—வோதுவிக்கும்
வேதியர்கள் காதலுறும் வேதாந்த பாஸ்கரனை
யோதுவதால் மோனம்வரு மோர்.

இந்நூல் பலநூல்கட்கும் ஒப்பற்ற மாணிக்கக் கிரீடமாமெனல்.

சாற்றரிய மோனநிலை சாதித்தார் சொல்லியபன்
னூற்றலைமேல் ரத்தினத்தா னுட்பமுற—வாற்றமிக
வைத்தமுடி வேதாந்த பாஸ்கரனை மாநிலத்தி
லொத்தவொரு நூலுமுள தோ.

இந்நூல் அஞ்ஞானிகட்கும் ஆத்மஞானமடைந்த மெய்ஞ்ஞானிகட்குஞ் சமர்ப்பித்ததன்று; நான் எப்பொழுது அத்துவிதமடைவேன் என்று சதா ஆத்மவிசாரம் செய்யப்பட்ட பரிபக்குவர்க் காமெனல்.

அங்கணங்கே றுற்றெளியா தாதலினால் ஞானமிலார்க்
கிங்குரைத்த தன்றிந்நூ லேதமறப்—பங்கயஞ்சேர்
தெண்ணீரிற் கென்னபயன் சில்லமதால் ஞானியர்க்கென்
றெண்ணியான் செய்ததுவு மில்.

இதுவுமது.

நிம்பங்கா யாக நினைப்பா ரபக்குவர்கள்
சம்பமும் வீவுந் தவிர்ப்பிக்க—நம்பியிறை
பக்கலிலே செல்லுமதி பக்குவர்க்கு முக்கனியுஞ்
சர்க்கரையு மாகுமிந்நூ லுண்.

தமதாசிரியர் அநுக்கிரகித்த பேருதவிக்குக் கைம்மாறு வேறின்றென வியந்து துதித்தல்.

கைத்தலத்து நெல்லியெனக் கண்டிடுவான் பக்குவர்க்குப்
பத்திதரும் வேதாந்த பாஸ்கரனை—யொத்துரைக்கக்
கைம்மாறு காணேன்மெய்க் கல்வியரு டேசிகர்க்கு
மைவானுக் காருதவு வார்.

நூற்செய்த காலமிஃதெனல்.

உலகுநவில் சகனுண்டோ ராயிரத்தெண் ணூற்றுமுப்பத்
தொன்பா னாக
விலகியபின் களவாண்டிற் சிம்மரவி மீதுமன
திரக்கங் கொண்டு
பலகலையுந் துருவியுளஞ் சலியாமற் பக்குவர்க்குப்
பகர்ந்தா னேவி
லலகில்புகழ் வேதாந்த பாஸ்கரமெய்த் தவநூலை
யவனி மீதே.

சோதி சொரூபமே துணை.

# வேதாந்த பாஸ்கரன்.

## கடவுளிலக்கணம்.

### முதலாவது அத்தியாயம்.



பலவளஞ்செறிந்த நிலமகடமக்கு இலகியவுடையாம் அலைகடலானது ஏகமாயிருந்தும் பற்பலவென்று பொருள் தோன்றும்படி இந்து மஹா சமுத்திரம், அராபிக்கடல், வங்காளக் குடாக் கடல் முதலிய பல பெயரிட்டு வழங்கப்பெறுகின்றது. பொன்னானது ஒரே உலோகமாயிருந்தும் கம்மாளர்கள் கைத்தொழிலினால் காப்பு, தண்டை, கொலுசு, பாடகம் முதலிய நானாவித நாமரூபங்களமைந்த ஆபரணமாக விளங்குகின்றது. மண் ஒரே தன்மையாக இருந்தும் குயவர்கள் தொழிலால் பானை, சட்டி, குடம், தொட்டி முதலான பல பெயரிட்டு வழங்குகின்றது. அதுபோல் முழுமுதற் கடவுளானவர் ஒருவராயிருந்தும் சமயபேதத்தால் முஹம்மதியர்கள் அல்லா எனவும், சைவர்கள் பரமசிவன் எனவும், வைஷ்ணவர்கள் நாராயணன் எனவும், கிறிஸ்தவர்கள் இயேசுகிறிஸ்து எனவும் இன்னும் எண்ணிறந்த சமயகோடிகள் தம்தம் சமயத்திற் கிசைந்த வெவ்வேறு நாமங்களிட்டு வழங்கப் பெறுகின்றார் ஆயினும் கடவுள் ஒருவரேயன்றிப் பலரல்ல.

சிவவாக்கியர்.

எங்கள்தேவ ருங்கள்தேவ ரென்றிரண்டு தேவரோ?
அங்குமிங்கு மாயிரண்டு ஆதிமூர்த்தி யொன்றலோ?
இங்குமங்கு மாய்நிறைந்த ஏகமூர்த்தி ரண்டெனை
வங்கவாரஞ் சொன்னபேர்கள் வாய்புழுத்து மாள்வரே.

கதவு, நிலை, சன்னல் முதலியவைகளை ஓர் தச்சுவேலைக்காரனிருந்து செய்திருப்பானேயன்றி, அவைகள் தானாகவே அந்தந்த

ரூபங்களை யமைந்திருக்கமாட்டாது. அதுபோல் யானைமுதல் எறும்பீறாக * எழுவகைத் தோற்றத்திலுண்டான § எண்பத்து நான்குலட்சம் ஜீவராசிகளையும், கடல், மலை முதலியவைகளையும் † சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியங்களைச் செய்யும் கடவுளென்னும் ஓர் தேவதச்சனிருந்து செய்திருக்கவேண்டுமேயன்றி, அவைகள் இயற்கையாகவே அமைந்திருக்கமாட்டாது.

கடவுள் சர்வ ‡ சராசரப் பொருள்களிலும் அங்கு இங்கு என்று சுட்டிச் சொல்லாதவிதமாய் எங்கும்; பூவில் வாசமும், எள்ளில் எண்ணெயும், பாலில் நெய்யும், உடலில் உயிரும், ஆகாயத்தில் வாயுவும், மண்ணில் ஜலமும், தாய்வயிற்றில் சிசுவும், நீரில் உப்பும் எப்படி அபேதமாய்க் காணப்படுகிறதோ அப்படியே (சர்வேந்தரியாமியாகியவராதலால்) நிர்விகற்பமாய் வியாபித்திருக்கின்றார்.

ஒரு நகரத்தைநோக்கிப் பிரயாணிகள் பலதிசைகளிலிருந்து பல பாதைவழியாக வந்தாலும் முடிவில் அவர்கள் எல்லோரும் ஒரே பட்டினத்தை அடைகின்றார்கள். காவேரி முதலிய நதிகள் அநேக பிரிவாய்ப் பற்பலதிசையை நோக்கிச்சென்றாலும் அவையனைத்தும் முடிவில் சமுத்திரத்தையே சேர்கின்றன. ஒரு மனிதனை வெவ்வேறு முறைமையால்; தந்தையென்றும், மாமனென்றும், மைத்துனனென்றும், அண்ணனென்றும், தம்பியென்றும் பலபேர் பலவிதமான பெயரிட்டழைத்தாலும் அவையெல்லாம் அம்மனிதன் ஒருவனையே குறிக்கப்படுகின்றன. அதுபோல் இவ்வுலகத்திலுள்ள சமய

---

* எழுவகைத் தோற்றம், தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம். § 84 நூறாயிரம் ஜீவராசிகளாவன; தேவர் (மலாயிக்கத்துகள்) பதினான்கு இலட்சம், மக்கள் ஒன்பது இலட்சம், விலங்கு பத்து இலட்சம் புள், பத்து இலட்சம் ஊர்வன பதினொரு இலட்சம் நீர்வாழ்வன பத்து இலட்சம், தாவரம் இருபது இலட்சம். † சிருட்டி-படைத்தல், திதி-காத்தல், சங்காரம்-அழித்தல், திரோபவம்-மறைத்தல் அநுக்ரகம்-அருளல். ‡ சரம்-இயங்குவது. அசரம் - இயக்கமின்றி நிற்பது. சரம், அசரம்; என்பது: சராசரமென்றாயிற்று.

கோடிகள் தம்தெய்வம் எம்தெய்வம் என்று அதேவேலையாகப் பிரசங்கமேடைகளிலும், தெருக்களிலும், சந்துபொந்துகளிலும் நின்றுகொண்டு பேரோலமிட்டு வாதம்புரிந்து தத்தம் சமய நூல் விதிவிலக்கும்படி வெவ்வேறு கடவுளாகப்பாவித்து வணங்கினாலும், அவ்வணக்கமெல்லாம் ஒரே கடவுளைச்சார்ந்த வணக்கமேயன்றிப் பலவணக்கமாகாது.

திருமந்திரம்.

கத்துங் கழுதைகள் போலுங் கலதிகள்
சுத்த சிவனெங்குந் தோய்வுற்று நிற்கின்றான்
குற்றந் தெரியாதார் குணங்கொண்டு கோதாட்டார்
பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே.

தாயுமானவர்.

சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி யருவுருவத் தன்மை நாமம்
எதுமின்றி எப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவறநின் றியக்கஞ் செய்யுஞ்
சோதியைமாத் தூவெளியை மனதவிழ நிறைவான துரிய வாழ்வைத்
தீதில்பர மாம்பொருளைத் திருவருளே நினைவாகச் சிந்தை செய்வாம்.

## ஆசிரியரிலக்கணம்.

### இரண்டாவது அத்தியாயம்.

ஆசிரியர்களில் மதாச்சாரியர்கள், காரியக்குருக்கள், காரணக் குருக்கள் என மூன்றுவகையுண்டு. அவர்களில்,

மதாச்சாரியர்கள்:— தனக்கு வரும்படிக்குண்டான அநுஷ்டானங்களைச் சீடர்கள் அநுசரிக்கும்படி கட்டளையிட்டு வீணான பற்பல கருமங்களை அவசியம் செய்துதான் தீரவேண்டுமென்று போதிப்பார்கள். அப்படி நடந்துகொள்வதால், 'மரணமானபின் இந்திரலோகம், பிரமலோகம் முதலியவைகள் கிடைக்குமென்றும், தேவமகளிர்களாகிய அரம்பையர்களுடன் சுகித்துப் பல கோடி வருடங்களையும் ஒருநாளாகக் கழிக்கும் தேவவருடங்களாற் சதாகாலமும் சுவர்க்காதிபோகத்துடன் வாழலாமென்றும் ஆசைவார்த்தை சொல்லித், தனக்குவேண்டிய பொருளைப் பகற் கொள்ளைக்காரர்கள்போல் அபகரித்துக், தான் கெட்டுப்போவதுமன்றித் தன்னைப் பின்பற்றியவர்களையும் கெடுத்து, அவர்க

ளாற் புகழப்பட்டு வாழ்வார்கள். அப்படிக்கொத்த ஆசிரியர்கள் வேடதாரிகளாவார்கள்.

### திருஷ்டாந்தம் — துரேசலோபாக்கியானம்.

ஓங்குபெரு ஞானியர்போற் பேசுவா ரவருண்மை வேடம் போலப்
பாங்குபெற வுடற்புனைவார் சற்கருமஞ் செய்வார்தம் பக்க மேகி
நீங்குகவென் றொழிப்பாரிந் நிலைமேலாம் பிரமத்தி னிலையே யென்பார்
ஈங்கிவர்கள் தாங்கெடுவ தன்றிமற்றோ ரையுங்கெடுக்கு மெண்ணம் பூண்
[டோர்.

காரியக்குருக்கள்:—ஆரம்பத்திற் சகல பற்றும் அற்றவர் போற் பேசி நட்புமுற்றியபின் தம்பி! நீ நல்ல பிள்ளையாயிருக்கின்றாய்! இந்தத் தொழிலை உனக்குத் தான் காட்டிவைக்க வேண்டுமென்று பரிந்துசொல்லி முக்கோணம், நாற்கோணம், அறுகோணம் இவைகளைக் கீறி, அதில் நசி, மசி, சிவயவசி இதுபோன்ற அட்சரங்களை அடைத்து அதை அவன் கையில் கொடுத்து இதைப் பத்திரமாய் வைத்துக்கொள்? பிறருக்குக் காட்டாதே? இதனால் சர்வதொழில்களும் சித்தியாகும்; ஆனால் தட்சணை கொடுக்காவிட்டால் சித்திக்காது எனக்கூறிப் பணம் பறிப்பார்கள். மனிதரிடத்திற் பேசும்போது இவர், அவர் என்று சொல்வதற்கு பதிலாய் இது, அது என்று பேசிக்கொள்வார்கள். இதுமட்டுமல்ல பலவித ஜாலமெல்லாம் செய்வார்கள்.

### துரேசலோபாக்கியானம்.

பொன்முதல் பொருளிடத்து மிச்சையற்றார் போற்றுறவு
பூண்டு பின்னர்
வன்மைசெறி மனத்தபக்கு வர்க்குபதே சமுநவிற்றி
வருவ தெல்லாம்
நன்மைதரு முன்னோரெண் காரொழுகப் பள்ளையென
நயந்தோ ராயன்
புன்மையறப் பற்றியஃ துடனழிந்தா னென்றகதை
போலு மாதோ.

மிக்கவறி வுடையாரைப் போன்றுமுடற் பற்றனைத்தும்
விடுத்தார் போன்றும்
தக்கவழக் கிடத்தினுயர் திணைவினையஃ றிணைவினையாச்
சமையச் சொற்றும்

தொக்கபடர்க் கைப்பெயர்முன் னிலைப்பெயராக் கிடவுரைத்துஞ்
சூழ்வ தெல்லாம்
பக்குவமின் மடவோரை மயக்கியவர் கைப்பொருளைப்
பறித்தற் கன்றோ?

காரணக் குருக்கள்: — இவ்வுலகத்திற் காணப்பெற்றவை யெல்லாம் அழியப்பெற்றவை என்றும், தான் வேறு கடவுள் வேருய்ப் பாவித்து வழிபடுந்தவமானது கைகூடாதென்றும், தனது யதார்த்த சொரூபத்தையே ஈசனுகப் பாவிக்கவேண்டு மென்றும் நிராசையாய் உபதேசிப்பார்கள்.

சற்சிடர்களுக்கு உபதேசஞ் செய்யத்தகுந்த ஞானசிரியர் மாசில்லாத மனமுடையவராயிருக்கவேண்டும். மனம் களங்க ரகிதமாகாதவரையில் அவரால் போதிக்கப்படும் உபதேசத்தால் ஞானேதயமாவது துர்லபம்.

வனத்திற் சஞ்சரிக்காநின்ற புழுவைக் குளவியானது எடுத்துவந்து தனது பஞ்சரத்திலடைத்து அந்தப்புழுவைத் தனது ரூபத்தை யடையும்படிச் செய்வதுபோலவும், ஆமையானது கரைக்குப் புறம்பாக முட்டையிட்டுத் தான் நீரிற்குள்ளிருந்து கொண்டே முட்டைகளை நினைந்துகொண்டிருக்க, முட்டையானது ஆமையினது வடிவத்தையடைவதுபோலவும், கோழியானது முட்டையிட்டு அவைகளைத் தன் வயிற்ருேடு அணைத்துக்கொண்டிருக்க வெப்பமதிகரித்துக் குஞ்சுகளாவதுபோலவும், ஜலத்தில் சஞ்சரிக்காநின்ற மச்சங்கள், தன் கருவைத் தண்ணீரிற் பீச்சிவிட்டு, அவை தன் வடிவத்தை யடையவேண்டுமெனக் கண்களாற் கூர்மையாகப் பார்த்தவுடன் அவை மீன்குஞ்சுகளாக மாறுவதுபோலவும், ஊசிக்காந்தமானது சமீபத்திலிருக்கும் இரும்புத்துண்டுகளைத் தன்னிடம் வரவழைத்துக்கொள்வதுபோலவும், தன்னை அடுத்துத் தொண்டுபுரிந்த மாணவன்மீது சற்குருமூர்த்தியானவர் கிருபாநோக்கம்பாலித்து; மானத, நயன, பரிச தீட்சைகள் செய்து தன்னுடைய அருட்சக்தியிற் சிறிது உதவி "சுடர்விளக்காயினுந் தூண்டுகோல்வேண்டும்." என்பதற்கிணங்கச் சீடனிடத்துள்ள இயற்கையான சக்

நியைத் தூண்டி உபகாரஞ்செய்யவேண்டும். அப்படிச் செய்பவரே சிறந்த கனிந்த ஞானசிரியர்.

சிவஞானவள்ளல்.

சிவத்துவ மசிசி வோக மத்துமி சிவோய மத்தி
நவத்துதி வாக்கி யத்தை நவையறு சீடற் கோதி
யவற்றுறு பொருளைத் தேற்றி யாங்கவன் கிலேசம் போக்கிப்
பவத்துயர் நசித்தான் றன்னைப் பரமவா சிரிய னென்ப.

ஞானசிரியர் சீடனிடத்தில் எவ்விதப் பிரயோசனத்தையுங் கருதாமல் நிராசையாய்ப் போதிக்கவேண்டும். சீடனுடைய உடல், பொருள், ஆவி மூன்றும் ஆசிரியருக்குச் சொந்தமாயினும் அவற்றாற் செய்யப்படுந் தொழிலைச் சீடனுடைய மனதைச் சோதிக்கும்பொருட்டு (அவசியமானல்) செய்யவேண்டுமேயன்றிச் சொந்தப் பிரயோஜனத்திற்காக நடத்தப்படாது. புகழுக்காகவோ! பணத்திற்காகவோ! உபதேசிக்காமற் கிருபா நோக்கம் ஒன்றினுலேயே உபதேசிக்கவேண்டும்.

சுருதியின் முடிவைத் தெற்றெனவுணர்ந்து மனமாசு நீங்கிக் காமக்குரோதாதிகளை வென்று நிர்ச்சலனமாயிருப்பவர் எவரோ? அவரே! தன்னையும், தலைவனுகிய கடவுளையும் நன்கறிந்தவர். அவரே மாணுக்கனுக்குப் பரமகருணாநிதியாகிய கடவுளின் சொரூபத்தைக் காட்டவல்லவர். மேற்கூறிவந்த குணங்குறிகள் ஆசிரியரிடத்தில் உளவாயின், அவரால் சீடனுக்கு யாதோர் அபாயகாரமுமில்லை. அவ்வாறில்லாத ஆசிரியரிடம் உபதேசம் பெறுவதில் நன்மையுண்டாகாவிட்டாலும், தீமையுண்டாவது திண்ணம்.

திருமந்திரம்.

குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர்
மூளும் பழங்குழி வீழ்வாா முன்பின்
குருடரும் வீழ்வாா முன்பின் னறவே
குருடரும் வீழ்வார் குருடரோ டாகியே.

ஆகையால் சகல ஆசைகளையும் அகத்திலடக்கிக்கொண்டு புறத்திற் பற்றற்றவர்போல் நடிக்கும் ஆசாடபூதிகளாகிய வேஷ

தாரிகள், பேதைச்சனங்களை மயக்கும்பொருட்டு படாடோபமாய், சாமியார், மஸ்தான் என்று வாய்ப்பறையடித்துக்கொண்டு தண்டு கமண்டலதாரியாய் ஊர்ஊராய்த் திரிந்து எளியவர்கள் பாவமெல்லாங் கைக்கொள்பவர்களிடத்தில் தீட்சைபெறக்கூடாதென்பது இதன்மூலமாய் வெள்ளிடைமலைபோல் விளங்குகின்றதல்லவா?

ஞானவெட்டி.

மண்டலத்திற் குருக்களென்று பேரும் பெற்று
  மகத்தான நூலிதமு மணிந்து கொண்டு
குண்டலங்கள் செவியிலிட்டுக் குல்லாச் சாத்திக்
  கோகரணங் கெஜகரண மிரண்டுங் கற்றுத்
தெண்டிரையிற் பலவிதமாய்ப் பொய்கள் சொல்லிச்
  சீடருக்கு முபதேசந் தெரியச் சொல்வார்
ஒன்றுமில்லை யவர்கள்கையில் வித்தை யாச்சு
  உள்ளவர்த்த மானமிதை யுரைசெய் வேனே.

உற்றுநின்ற சாஸ்திரத்தைப் பார்த்துப் பார்த்து
  ஊனுகிடை யாமலுந்தான் புறட்டிப் பேசிப்
பத்தரென்றுங் குருக்களென்றும் வகுத்துச் சொல்வார்
  பாகதியுந் தருவமென்று பணம் பறிப்பார்
வித்துநின்ற விடங்காணார் வேருங் காணார்
  விளங்குபரந் துலங்குகின்ற வீடுங் காணார்
எத்தவமுந் தருவமென்று உலகஞ் சுற்றி
  எளியோர்கள் பாவமெல்லா மினிக்கொள் வாரே.

ஞானமதியுள்ளான்.

வாசியி லேதினம் வாழ்ந்தோமென் றேசொல்லி
  வையகத் தோரை மயக்கித் தியக்கியே
தேசியி லேறும் வகையறி யாமலே
  சீடர்க் குபதேசம் செய்பவன் பேயன் (நானடா)

பாலிலே தண்ணீரைக்கலந்து அன்னப்பட்சியின் முன்னே வைத்தால் நீரைப் பிரித்துவிட்டு பாலைமாத்திரம் பருகிவிடும். அதுபோற் சற்சீடனிடத்திற் சிற்சில குற்றங்கள் காணப்படினும், அவைகளைத் தனது கருணையால் விலக்கிக், குணத்தைப் பாராட்டி, சற்குருமூர்த்தியானவர் கிடைத்தற்கரிய தத்துவோபதேசஞ் செய்யவேண்டும்.

திருமந்திரம்.

கறுத்த விரும்பே கனகம தானால்
மறித்திரும் பாகா வகையது போலக்
குறித்தவப் போதே குருவருள் பெற்றான்
மறித்துப் பிறவியில் வந்தணு காமே.

பொன்னரிக்குங் கம்மியன் கம்மாளர்களிடத்திலுள்ள பொன்கலந்த மண்ணைவாங்கித் தனக்குப் பிரயோஜனமான பொன்னைமட்டிலும் அரித்துக்கொள்ளுவான். அதுபோல் சற்சிடனானவன் காலவேறுபாட்டால் அஞ்ஞானிகளுடன் கலந்து வாழ்ந்தாலும் அவனை அந்தக்கூட்டத்திலிருந்து விலக்கி அருமையான சகசநிஷ்டையை ஞானாசிரியர் உபதேசிக்கவேண்டும்.

விஷந்தீண்டியவனை மந்திரசக்தியாலும், ஔடதப் பிரயோகத்தாலுந் தெளிவிப்பார்கள். அதுபோல் பிறவித்துன்பமென்னும் சுழலில் அகப்பட்ட நன் மாணவனை மெய்கண்ட தபோதனர்கள் சிந்தனையாலும் திருநோக்கத்தாலும் அஸ்தமஸ்தகசையோகத்தாலும் தனது திருவடிப் பரிசத்தினாலும் மெய்ஞ்ஞானியாக்கிவிடுவார்.

ஒழிவிலொடுக்கம்.

பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்தும் மலமாயைக்
கருமத்தை யெல்லாங் கழற்றிச்—சரிதாதி
வாதனையாம் போத மயக்கத்தை வாக்காலே
போதைசெய்து போக்கிவிடப் போம்.

இந்தப் பூமியினிடத்தில் ஒருவனுடைய வியாதியை நிச்சயம்பண்ணி, இத்தனைநாளைக்குப் பிறகு தான் இவனுக்கு ஔடதங்கொடுக்கவேண்டுமென்று வைத்தியர்களால் நியமிக்கப்பெற்றாலும் ஒவ்வோர் அசாத்தியமான வியாதியுடையவனுக்குப் பிணிசம்பவித்த அந்த நிமிஷமே * பூபதிமுதலிய அரிய ஔட

* பூபதி செந்தூரத்தின் முறை. பதங்கவெள்ளை, லோகவெள்ளை, காந்தவெள்ளை, நாகவெள்ளை, செம்புவெள்ளை, வகைக்கு களஞ்சு 2, இவைகளை ஒருசாமம் காமப்பால்விட்டரைக்கவும். அதன்பின் வயிரம், பவளம், முத்து, புஷ்பராகம், மரகதம், மாணிக்கம் வகைக்கு களஞ்சு ½, கெந்தகம் களஞ்சு 4, முப்பு களஞ்சு 4, இரசம் களஞ்சு 8, தாளகம்,

தங்களைக் கொடுத்து அவனுயிரை உடனே திருப்ப முயல்வார்கள். அதுபோல் சாதன சதுட்டயமே ஓர் வடிவெடுத்து வந்ததுபோன்ற தீவிரதா பக்குவனுக்கு ஓராண்டேனுஞ் சோதனை புரிந்து அதன்மேல் ஞானசிரியர் அநுக்ரகம் பண்ணவேண்டுமென்று சாஸ்திரங்கள் முறையிட்டிருப்பினும் ஒவ்வோர் அதிதீவிரதாபக்குவனுக்கு அந்தச்சணமே அல்லமதேவர் அக்கமாதேவிக்கு உபதேசஞ்செய்ததுபோல் உபதேசிக்கவேண்டும்.

பாதாதிகேசபரியந்தம் அக்கினி பற்றிக்கொண்டவனுக்கு மடுவில் விழுந்து மூழ்கினாலன்றி கொஞ்சசலத்திற் பிரவேசித்தால் அந்த அக்கினியின் வெப்பந்தணியாது. அதுபோல் பிரபஞ்ச மாயையென்னும் கொடிய வேங்கைக்குப்பயந்து சரணகதியடைந்த சீடனுக்கு, அவனை விழுங்கி மேலிடப்பெற்ற அகண்டாகார ஞானநெறியைச் சற்குருவானவர் உடனே அநுக்ரகம் செய்யவேண்டும்.

---

## சீடரிலக்கணம்.

### மூன்றாவது அத்தியாயம்.

சீடன், மாணாக்கன், என்பன ஒரு பொருட்கிளவி.

மாணாக்கர்கள்: உத்தமமாணாக்கர், மத்திமமாணாக்கர், அதமமாணாக்கர் என மூவகைப்படும்.

---

மனோசிலை, வெள்ளைப்பாஷாணம், துத்தம், துரிசு, நவச்சாரம், சீனாக்காரம், வீரம், பூரம் வகைக்கு களஞ்சு 1, இவைகளைப் பொற்றலைக்கையான் சாற்றால் 1 சாமம் அரைத்து அமுரியில் சுருக்குக்கொடுத்து எடுத்து பழச்சாற்றால் 1 சாமம் அரைத்து வில்லைசெய்து ரவியில் காயவைத்தெடுத்துப் புதுக்கலசத்திற்குள் வைத்து வலுவாய் மூடி 7 சீலைமண் வலுவாய்ச்செய்து 50 எருவில் புடம்போடப் புகையாமற்கட்டி நீறும். புடம் ஆறினபின் எடுத்துப்பார்க்கச் செந்தூரம் அருணோதயம் போல் சிவந்திருக்கும். செந்தூரத்தின் எடைக்குப்பாதி சாதிலிங்கஞ் சேர்த்து முலைப்பால் விட்டரைத்து விரல்நீளம் கம்பிபோல் செய்து உலர்த்திவைத்துக்கொண்டு குருபதத்தை வணங்கி அனுப்பானத்தில் அரிசி எடை கொடுத்தால் இறந்தவனுக்கும் தாது உண்டாகும் என்பர் ஆன்றோர்.

உத்தமமாணுக்கன்:—இவனே முதன்மாணுக்கன்; இவன் அன்னப்பட்சியையும், பசுவையும்; நிகர்த்தவன். அன்னப்பட்சியானது பாலுடன்கலந்த நீரைப் பிரித்துவிட்டுப் பாலைமாத்திரம் பருகுமாப்போல் ஆசிரியரிடத்திலுள்ள நற்குண நற்செய்கை, தீச்குண தீச்செய்கைகளில் தீக்குண தீச்செய்கைகளைப்பற்றி இகழாமல், நற்குண நற்செய்கைகளுக்காகமட்டும் புகழ்வான். பசுவானது அதிகமான புல்லுள்ளவிடத்தைக் கண்டால் வயிறு நிரம்ப மேய்ந்து, பின்பு ஓரிடத்தில் படுத்துக்கொண்டு சிறிதுசிறிதாக வாயில் வருவித்து மென்றுதின்று ஜீரணப்படுத்துவதைப்போல், ஞானுசிரியரிடத்திற் கேட்ட உபதேசத்தை ஓர் ஏகாந்தமானவிடத்திலிருந்து சிந்தித்து நிஷ்டைகூடுவான்.

மத்திமமாணுக்கன்.—இவனே இடைமாணுக்கன் இவன் உழுகிற நிலத்துக்குச் சமானமானவன். உழுநிலமானது உழவர் வருந்திப் பயிர்செய்யும் முயற்சிக்குத்தக்கவாறு விளைவைத் தருவதுபோல் ஞானுசிரியர் சீடன் சமீபத்திலிருந்துகொண்டு எவ்வளவுக்கு இகழ்ந்துபேசி ஆத்மவிசாரமுண்டாக்குகின்றுரோ? அவ்வளவுக்கு (நிர்ப்பந்தத்திற்காக) சிறிதுசிறிது அநுஷ்டிப்பான்.

அதமமாணுக்கன்.—இவனே கடைமாணுக்கன்; இவன் பன்னுடையையும், வெள்ளாட்டையும், எருமையையும், பலதுவாரமுள்ள இல்லிக்குடத்தையும், உண்ணியையும்: மரத்துண்டையும், சரீரத்தையும் நிகர்த்தவன்.

பன்னுடையானது நெய், தேன் முதலியவைகளை வடிக்கட்டுதற்பொருட்டுத் தன்மேல் வார்க்கும்போது மதுரமான சாரத்தைக் கீழே ஒழுகவிட்டுச் சாரமற்ற கசட்டையே தன்னிடத்தில் தங்கச்செய்யும். அதுபோல், ஆசிரியர் திருவாயிலிருந்துவந்த உசிதமான சம்பாஷணையை மறந்து விட்டு அநுசிதமான சம்பாஷணையையே! சிந்தித்துக்கொண்டிருப்பான். வெள்ளாடானது, ஒரு செடியிலேயே தன் வயிறு நிரம்பும்படி தழை நிரம்பியிருக்கப் பெற்றுலும் அதனை வயிறுநிரம்ப மேயாமல் "கன்றுமனத்துடனுடு தழை தின்றுற்போல்" என்னுந் தாயுமானவர் வாக்கியம்போன்று பல செடிகளிலுஞ்சென்று சிறிது சிறிது தின்று வயிறு நிரம்பா

மல் அலையும். அதுபோல் தான் இரண்டறக்கலத்தலாகிய பிரம்ம ஞானம் அடைவதற்குண்டான தவநெறிகள் ஒரே ஆசிரியரிடத்திற் காணப்பெற்றாலும் அவரிடத்திற் சிற்சில விஷயங்களைக் கேட்டமாத்திரத்திலேயே அவரிடத்தை நீங்கிப் பல ஆசிரியர்களிடத்திலும் அலைந்து உண்மையை அறியாமல் மயங்கித்திரிவான். எருமையானது தெளிந்த நீரைக் கலக்கி அதன் பின்னரே பருகுவது போன்று, ஞானாசிரியர் இதயத்தை மகிழும்படிச் செய்து: அவராலுபதேசிக்கப்படும் ஞானாமிர்தத்தைத் தெளிவுபெறவுண்ணாது அவர்சித்தத்தைத் தனது விபரீத வினாவாற் கலக்கிச் செவிவாயினாலுண்பான். பலதுவாரங்களையுடைய இல்லிக்குடமானது, தன்னுள் வார்க்கும் நீரைப் புறத்தில் ஒழுகவிட்டு நிரம்பாமலிருப்பதுபோன்று, ஆசிரியர் இரவும் பகலுமாக ஞானாமிருதத்தைப் பல திருட்டாந்த தாட்டாந்தங்களைக் கொண்டு பலகாற் புகட்டினும், புகட்டும் அக்கணத்திற்றானே அந்த வாக்யாமிருதத்தை மறந்துவிடுவான். உண்ணியானது, பசுவின் முலைக்காம்பின் பால் வரும் துவாரத்திற்கடித்து பரிசுத்தமும் மதுரமும் பொருந்திய அந்தப்பாலை யுண்ணவகை தெரியாமல், அசுத்தமாயும், துர்க்கந்தமாயு மிருக்கின்ற அப்பசுவின் இரத்தத்தைப் பருகி ஆனந்தமடைவதுபோல், ஆசிரியர் வாக்கியத்தின் ஞானாமிர்தஞ் சுரந்து பெருகிவராநின்ற அர்த்தத்திலமுந்திச் சுகாநந்தம்பெறாமல், அனர்த்தத்தையே பொருளாகக் கொள்வான். மரத்துண்டானது, பல மனிதர்கள்கூடித் தன்னை நீரிற் பூமி மட்டத்திற்கு அழுத்தினாலும், அவர்கள் கையைவிட்டவுடன் கனவேகமாய்க் கிளம்பி நீர்மட்டத்திற்கு வந்துவிடுவதுபோல், ஆசிரியர் மாணாக்கன் அறிவைப் பற்பல சாஸ்திர உவமான உபமேயங்களினாதாவைக்கொண்டு ஞானானந்த சமுத்திரத்தில் முழுக்ச்செய்யினும் அவர் போதனை நீங்கிய அக்கணத்திற்றானே விடய இச்சையாற் பகிர்முகத் தாராய்ச்சியிற் சிக்கி வருந்துவான். சரீரமானது, பலவிதமான சுகந்தப்பொடி, சந்தன முதலிய களபகஸ்தூரிகளாற் பரிமளிக்கச்செய்து, திவ்யமான வாசனைநீரில் ஸ்நானஞ் செய்து, பரிசுத்தப்படுத்தி வைக்கப்பெற்றாலும்; மீண்டும் வேர்வையாதிகளால் துர்க்கந்தம் வீசுதல்போன்று ஆசிரியர் சீடன்

மனத்தை ஞானோதகத்தாற் பலதடவைகளிலுஞ் சுத்தப்படுத்தி வைத்தாலும் மீண்டும் மும்மலாதிகளின் விடய துர்க்கந்தத்திற் பொருந்தி வருந்துவான்.

ஒழிவிலொடுக்கம்.

முலையுண்ணி நீருண்ணு மோட்டெருமை மூடர்
சலமின்றிச் சந்துரைப்பார் தர்க்கர்—பலதாரை
வட்டிலே போலுமவர் மாயோக வாசகத்தைக்
கிட்டி னரகங் கிடீர்.

நன்னூல்.

அன்ன மாவே மண்ணொடு கிளியே
இல்லிக் குடமா டெருமை நெய்யரி
அன்னர் தலையிடை கடைமா ணாக்கர்.

சரற்காலத்து முகிலைக்கண்டு குதூகலித்து நடனமாடும் பசிய கலாபத்தையுடைய மயிலைப்போலவும் தியாகங்கொடுக்கும் செல்வவந்தர்களை ஆராய்ந்து தேடுங் கவிவாணர்களைப்போலவும் நாயகனைச் சிந்தித்துக்கொண்டிருக்குங் குலமகள் போலவும், சூரியனைக்கண்டு இதழ்கள் விரியாநின்ற சரோருகம் போலவும், சந்திரனைக்கண்டு மடலவிழும் நீலோற்பலம் போலவும், தனது குருமூர்த்தியை இடைவிடாமற் சிந்தித்து தரிசித்தமாத்திரத்தில் ஆநந்தபாஷ்பம் சொரிந்து ஆநந்த நிர்த்தனம் செய்பவனே சற்சீடன்.

நான் யார்? எனக்கு ஆசான் யார்? நீங்காத ஜனனமரணங்கள் எனக்கு வந்தது யாதுகாரணத்தால்? நான் எப்போது ஆத்மலாபம் அடைவேன்? என்று தனக்குட்டானே ஆத்மவிசாரத்தையடைந்து, தேனைத்தேடித் திரியும் வண்டினங்களைப்போல் தனது சற்குருமூர்த்தியைப் பலவிடங்களிலும் தேடியலைபவனே சற்சீடன்.

சிவஞானவள்ளல்.

மண்ணுக்கிரையாமிவ்வுடம்பை மாற்றவேண்டிவனமலைகள்
மொண்ணைப்பொதும்பர்நந்தவன மூதூர்தனித்தவிடந்தோறும்
உண்மெணக்குருகித்தேசிகனைத் தேடிவாடியுயிர்ப்பெறிந்து
கண்ணிலருவியொழியாதுய்க் கலங்கிமலங்கிக்கதறினனே.

ஒவ்வோர் மனிதரும் அரசன் சமுகத்திலும், இயமன் முன் னிலையிலும் மீறுமல் அடங்கிவிடுவார். அதுபோல், ஞானசிரியர் திருவாக்குக்கு எதிர் வாக்கின்றிப் பாகன்கீழ் யானை அடங்கி அவனிட்டவேலையைச் செய்துமுடிப்பதுபோற் குருமூர்த்தியின் மனோபீஷ்டத்திற்கிணங்கி அடங்கி நடப்பவனே சற்சீடன்.

இரவெல்லாம் சமீபத்திலிருந்து குருபரனது உபயதிருவ டித்தாமரைகளை வருடிக்கொண்டிருந்து பகலெல்லாம் குற்றேவல் புரிந்து; மனம், வாக்கு, காயமென்னும் திரிகரணசுத்தியாக அன் புடன் பணிசெய்பவனே நன்மாணவன்.

சிவஞானவள்ளல்.

குருவாக்கமுதமெனக் கொண்டுவந்தசீடன்
குருவாக்கையன்றி மற்றைக்கொள்ளான்—குருவாக்கால்
உய்ந்தோமென்றிந்த வுலகறியப்பன்முறையும்
தொந்தோமென்றூடித் தொழும்.

ஒற்றுமையில் உடலுக்கு உயிரைப்போலவும், பாதுகாத்த லிற் கண்ணுக்கு இமையைப்போலவும், நடையில் ஊசியும் நூலும்போலவும், சர்ப்பத்தைப் பிடியென்று சொன்னமாத்தி ரத்திற் பிடிக்கவும், புலியைக் கட்டித்தழுவென்றவுடன் அங்ங னஞ்செய்யவும், நெருப்பை எடுக்கச்சொன்னால் அவ்வாறு எடுக் கவும், மதகரியின் முன்னே நில்லென்றால் அஞ்சாமல் நிற்கவும், இவனது சித்தம் மஹா! திடச்சித்தமென்று கண்டோர் வியந் துசொல்லும்படியான பரிபக்குவனுக்கு சற்குருமூர்த்தியானவர் ஆத்மஞான நிஷ்டையை உபதேசிப்பார்.

தணங்தடியார்.

வஞ்சவேல்கொடு மார்பிலெறியினும்
மிஞ்சவேதழல் மீட்டியெரிக்கினும்
நஞ்சினாழல் நாகம்நலியினும்
அஞ்சிடாதவர் ஆனந்தமாவரே.

ஆசிரியர் மாணவனுடைய பரிபாக பக்குவத்தைப் பரிசோ திக்க எண்ணிச் சீடன் பயப்படும்படியாகத் தன்னாலாவது பிற ரைக்கொண்டாவது கேவலமான தொழில்களைச் செய்யும்படி

உத்தரவு செய்தும், காருண்யமில்லாதவர்போன்று கல் முதலியவைகளால் எறிந்தும், இழிவான சொற்களால் வைதும், மானக் குறைவு தோன்றும்படிச் செய்தாலும்; அவ்வமயத்திலும் குருபத்தி வழுவாமற் பணிபுரிபவனுக்கே சிற்சுகோதயப் பிரம்ம நிஷ்டையை உபதேசிப்பார்.

சிவநெறிப்பிரகாசம்.

தேசிகரு மாணவர்கள் செய்தியுணர்ந் திடவே
சிறியோரைப் பெரியோர்செய் தொழிலதனிற் செறித்தும்
ஏசிலராம் பெரியோரை யீனமாந் தொழிற்கே
யிசைத்தும்அடித் தும்வைதும் இவ்வாறு செயவும்
கூசியிடா திட்டபணி செய்துகுரு பத்தி
குறைவிலராய் நம்பினராய்த் துரோகமென்ப தின்றி
மாசிலராய் மனம்வாக்காற் காயத்தாற் குருவின்
வாக்கியம்பா லனஞ்செய்யும் மதிமானு மாமே.

அருட்பிரகாசம்.

குருபர னுக்கவன் நெஞ்சகம் போலனு கூலத்தனுய்க்
கரசா ணுதியி னேவல்செய் தேதினங் கட்கிமைபோல்
உரிய மனைமுதல் யாவையுங் காத்துண்மை யாயொருதற்
பரமிவ னேயெனக் காண்பான்சற் சீடன் பகர்ந்திடினே.

தேசிகன் பாற்பற் பலதீக் குணங்கள் செறியினுநம்
பாசப் பிராந்திக் கிவைதோற் றியவிறை பாலிலையென்
றூசறு பத்தியி னோர்ந்தெவ் விதத்து மவனருளைத்
தேசங் குலவ வளர்ப்போன் சற்சீடன் செறிந்திடினே.

நெருப்பில் நடந்தவர்களும், நீர், நிழலில்லாத கொடிய பாலைவனத்திற் செல்பவர்களும், குளிர்ந்த ஜலத்தைத் தேடியலைவார்கள். அதுபோற் சற்சீடனானவன் உலகவியாபாரமாகிய வெப்பத்தைச் சகித்தற் கியலாது, குருமூர்த்தியாகிய கருணைத் தேவ விருட்சத்தின் திருவடி நீழலைத் தேடிக்கண்டு வணங்கிப் புகழவேண்டும்.

சிவஞானவள்ளல்.

கண்டான் குருவைக் கண்ணாரக் கதறிவீழ்ந்தான் கமலமிசை
அண்டா வரனே! நெடுமாலே! அயனே! என்றா னகமகிழ்ந்தான்
தொண்டா லியலும் பணிசெய்யத் துணிந்தான் பணிந்தான் மும்முறையே
பூண்டால் நிறைந்த பாவாலுங் காவாயென்னப் பாடினான்.

அஸ்திநபுரியில் இராச்சியபரிபாலனம் புரிந்த திருதராஷ்டிர மஹாராஜனது நூறு புத்திரர்களாகிய கௌரவர்கட்கும், பாண்டுமஹாராஜன் புத்திரர்களாகிய பஞ்சவர்கட்கும், துரோணாசிரியர் வில்வித்தை கற்பித்து வந்தார். அவ்வித்தையைக் கற்றுக்கொள்ள அநேகர் ஆர்வங்கொண்டார்கள். அவர்களில் வேடஜாதியில் தலைமைபூண்ட ஓர் சிற்றரசனது செல்வக்குமாரனாகிய ஏகலைவன் என்பவனும் கற்றுக்கொள்ள எண்ணி, துரோணரையடுத்து, அதைத் தனக்குக் கற்றுக்கொடுக்கும்படி வணங்கிக் கேட்டுக்கொண்டான். அவனுக்குக் கற்றுக்கொடுப்பது முறையன்றெனக் கருதி, தனக்கு அவகாசமில்லையென்று துரோணர் சொன்னார். அதனால் ஏகலைவன் மனச்சோர்வடையாமல் அவருக்குச் சாஷ்டாங்கதண்டஞ் சமர்ப்பித்து, அவரது உபய திருவடிகளைத் தன் நேத்திரங்களில் ஒத்திக்கொண்ட பின்னர் விடைபெற்றுத், தனது எதாஸ்தானத்திற்குச் சென்று, அங்கோர் சிலம்பக்கூடம் நிறுமித்து, அதில் துரோணரைப்போன்ற விக்கிரகம் ஒன்று ஸ்தாபித்து, தினந்தோறும் அதை வணங்கி, வில்லைக் கையிற்பிடித்து ஆசிரியர் தனக்குக் கற்பிப்பதுபோல் மானதமாகப் பாவனைசெய்து வந்தான்.

இஃதிங்ஙனமிருக்க; ஒருநாள் அர்ச்சுனன் தனது வேட்டைநாயுடன் காட்டுக்குச் சென்றான். அந்தநாய் அங்கும் இங்கும் ஓடித்திரிந்து, முடிவில் ஏகலைவன் சிலம்பக்கூடத்திற் புகுந்து, துரோண விக்கிரகத்தை அசுத்தப்படுத்திவிட்டது. அஃதுணர்ந்த ஏகலைவன் சினங்கொண்டு ஓர் அஸ்திரத்தை அந்த நாயின்மேற் பிரயோகித்தான். அந்த ஓரே அம்பு நாயின் சரீரமெங்கும் ஊடுருவிச் சல்லடைக்கண்போலாக்கி, முடிவில் அதன் வாயின் வழியாய் வெளிவந்தது. அவ்வருத்தத்தைச் சகிக்காமல், அந்த நாய் அர்ச்சுனன் சமுகத்தை யடைந்தது. அதைக்கண்ட அர்ச்சுனன், தன் நாய்படும் அவஸ்தைக்காக வருந்தியதுமன்றி, ஓரே அம்பு உடலெங்கும் பாயும் வித்தையை, நமக்கன்றிப் பிறர்க்குப் போதிப்பதில்லை யென்று கூறியிருந்த நமதாசிரியர், நம்மைவஞ்சித்து மற்றொருவருக்கும் கற்றுக்கொடுத்திருக்கிறார் என்பது,

இந்த நாயின் மூலமாய் விளங்குகின்றதல்லவா? ஆயினும் இத னுண்மையை முற்றிலுங் கவனிப்போம் எனக்கருதித், தனது நாயுடன், ஏகலைவன் இருப்பிடத்தை நாடிச்சென்றான். அர்ச்சு னன் வரவை ஏகலைவன் கண்டு, எதிர்சென்று வணங்கி, ஓர் ஆச னத்தில் அமர்த்தி, நடந்தவைகளை மிகுந்த பணிவுடன் ஆதியோ டந்தமாய்ச் சொன்னான். அதைக் கேட்டுப்போய் அருச்சுனன் துரோணருக்கு அறிவித்தான். உடனே துரோணர், ஏகலைவனிட த்திற்கு வந்தார். அவர் வரவைக்கண்டு ஏகலைவன் அடங்கா மகிழ்ச்சிகொண்டு, எதிர்சென்று பன்முறை வணங்கி, ஓர் சிறந்த ஆசனத்திலிருத்திக் கைகட்டி, வாய்புதைத்து நின்றான். துரோ ணர் ஏகலைவனை நோக்கி, நீ! எவ்விதமாய் இவ்வித்தையைக் கற்றுக்கொண்டாய்? என வினவினர். அவரிடத்திலும் ஆதியோ டந்தமாய்ச் சவிஸ்தாரமாகச் சொல்லிக், குருதட்சணையும் சமர் ப்பிக்க விரும்புகிறேன்? தேவரீர் விருப்பம் எவ்வாறென்று விண் ணப்பித்து நின்றான்.

துரோணர் அர்ச்சுனனது றூண்டுதலின்பேரில், அவனது வலதுகைப் பெருவிரலைத் தட்சணையாகக் கேட்டார்; ஏகலைவன் முன்பின் ஆலோசிக்காமல், அவ்வாறே கொடுத்து வணங்கினான்.

ஆகையால் முத்தியைக்கருதி ஞானாசிரியரை அடையவிரும் பும் பக்குவிகளாகிய மாணவர்கள், ஏகலைவன் பக்தியைத் தத் தம் மனதிற் பசுமரத்தாணியைப்போற் பதிய வைக்கவேண்டும்.

தனிப்பாசுரத்தொகை.

தந்தைக்குதவுந் தனிமகன்போல, விந்தைக்களத்தின் மேதகவெய்தியும்
தலைவனைவிழையுந் தலைமகள்புரையக்,கலைவலாசானைக் கண்டுகளிசிறந்தும்
உருவைவிட்டகலா வொண்ணிழலொப்பக் குருவையடுத்துக் குற்றேவல்செய்தும்,
பரமனைவழிபடூஉம் பத்தன்மானக் குரவனைமனத்திற் கொண்டுதுதித்துங்,
கார்பெயச்செழிக்குங் கழனிகடுப்ப ஏர்பெறுமவன்சொலை யினிதுளமடுத்தும்,
அரசற்கிறையிடு மவன்குடியியைய்ப் பரசுபுநற்பதம் பைம்பொன்கொடுத்
மன்னுநன்மாணவன் என்ன வகுத்தன ரியல்புணர்ந்தோரே. [தும்

வீராகமம்.

அடுத்ததின் றன்மை யான்மா வாகுமென் றறிந்து நல்லோர்
நடித்திடுஞ் சமய வாற நற்றவஞ் செபந்தி யானம்
படிற்றுல கியற்கை யாவும் பாகதி விலக்கா மென்றே
விடுத்தருட் குரவன் பாத மேவிமெய்ப் பணிசெய் வாரே.

### சிவஞானவள்ளல்.

காசிவாஞ்சியங் காளத்தி கழுக்குன்றங் காஞ்சி
மாசிலாருறை பருப்பதங் கோகன மறைக்கா
டேசிலாதுறை மூர்த்திதக் தெரிசன மெல்லாந்
தேசிகன்றிருச் சேவையை நிகர்க்குமோ செப்பில்.

### நன்னூல்.

அழலினீங்கான் அணுகான் அஞ்சி நிழலினீங்கான் நிறைந்தநெஞ்சமோடு
எத்திறத்தாசா னுவக்குமத்திறம் அறத்தின்றிரியாப் படர்ச்சிவழிபாடே.

ஆசாரியனிடத்திற் பத்தி விசுவாசமும், தாழ்மையும், சீடனுக்கு இல்லாவிடின்; அந்தச் சீடனுக்கு ஞானோதயமாவது துர்லபம். ஓர் எழுத்தாகினும், ஓர் சொல்லாகினுந் தனக்கு உபதேசித்தவரைச் சற்குருவாகப் பாவித்துத் திரிகரண சுத்தியாக வணங்கித், தன்னாலியன்ற ஒத்தாசைகளைச் செய்து வழிபடவேண்டும். அவர் நீங்கியகாலத்திலும், மனத்தில் மானதமாகச் சிந்திக்கவேண்டும். அங்ஙனமின்றி, அவர் மனது நோகும்படி நடந்துகொண்டால், வேறெந்தக் குருவினாலும் அநுக்ரகிக்கப் பெறாமல் பிறவித்துன்பத்தில் வருந்துவான்.

### திருமந்திரம்.

ஓரெழுத் தொருபொரு ளுணரக் கூறிய
சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பினோர்
ஊரிடைச் சுணங்கனாய்ப் பிறந்தங் கோருகம்
பாரிடைக் கிருமியாய்ப் படிவர் மண்ணிலே.

மந்திர மோரெழுத் துரைத்த மாதவர்
சிந்தையில் னொந்திடத் தீமைகள் செய்தவர்
நந்திய சுணங்கனாய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே.

ஆண்டா னடியவர் யார்க்கும் விரோதிகள்
ஆண்டா னடியவ ரையமேற் றுண்பவர்
ஆண்டா னடியாரை வேண்டாது பேசினோர்
தாந்தாம் வீழ்வது தாழ்வா நரகமே.

---

33

# சரியை.

## நான்காவது அத்தியாயம்.

ஞானமென்னும் வீட்டிற்கு, சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்று முதன்மையான படிகள் உண்டு. அப்படிகள் ஒவ்வொன்றிற்கும் உட்படிகள் நான்குபடிகள் வீதம் உண்டு. அவை பின்வருமாறு:—

சரியை:—சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் என நான்குபடிகள்.

சரியையிற் சரியை:—கோவில், பள்ளிவாசல் முதலியவற்றிற்குத் திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருவிளக்கிடுதல், (விதானம்) மேற்கட்டி கட்டுதல், தோரணம் நாட்டுதல், தூபமிடுதல், நந்தவனம் வைத்தல், பூக்கொய்தல், மாலை தொடுத்தல், (மக்கா, மதீனு,) காசி, இராமேச்சுரம் முதலிய புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரைசெய்தல், நதிகளில் மூழ்குதல், ஆலயப்பிரதக்ஷணஞ்செய்தல், தோத்திரம் பாடல், புல்லுச் செதுக்குதல், திருக்குளமுதலியவை சுத்திசெய்தல், பசுக்காத்தல் முதலியன.

சரியையிற் கிரியை:—சந்திரசேகரர் முதல் இலிங்கோற்பவர் ஈறுகவுள்ள இருபத்தைந்து முகூர்த்தங்களுள் ஒன்றையாகிலும், விநாயகக்கடவுள், முருகக்கடவுள் என்னும் ஆவரணமூர்த்திகளில் ஒன்றையாகிலும் வழிபடுதலாம்.

சரியையில் யோகம்:—இருதயத்தில் ஒரு சொரூப பாவனையைத் தியானஞ்செய்தல்.

சரியையில் ஞானம்:—அந்தத் தியானபாவனையின் முதிர்ச்சியினுல் ஓர் அனுபவவுணர்வு நிகழ்தல்.

சரிதையை வேதாகமங்களிற் கூறிய விதிப்படி ஒருவன் தவருமற் செய்தாலும், அவன் செய்வதிற் பல *சங்கற்ப மனதுடையவனுனுற் சரிதையை ஒருங்கே முறைப்படி புரிந்தவனுகமாட்டான். தனக்குக் கிடைத்ததை மனோதிருப்தியாகச் செய்து கடவுளுக்கு அர்ப்பணம் எவன் பண்ணினுனே? அவனே, அச்சரிதைக் குடையவனுவான்.

* சங்கற்பம் - விருப்பம்.

## கிரியை.

### ஐந்தாவது அத்தியாயம்.

கிரியை:—கிரியையிற் சரியை, கிரியையிற் கிரியை, கிரியையில் யோகம், கிரியையில் ஞானம் என நான்கு படிகள்.

கிரியையிற் சரியை:—பூசைக்கு வேண்டப்படும் உபகரணங்களைச் செய்துகொள்ளல்.

கிரியையிற் கிரியை:—* சிற்சத்தி, † பராசத்தி, ‡ இச்சாசத்தி, § ஞானசத்தி, ¶ கிரியாசத்தி என்னும் பஞ்சசத்திகள் முன்னிலையிற் சிவலிங்கவடிவிற் செய்யும்பூசனை.

கிரியையில் யோகம்:—அகத்தினிடத்தே, பூசை, ஓமம், தியானம் என்னும் மூன்றற்கும் மூவிடம் வகுத்துக்கொண்டு செய்யும் அந்தரியாகம்.

கிரியையில் ஞானம்:—அந்த அந்தரியாக உறைப்பின்கண் நிகழும் ஓர் அநுபவவுணர்வு.

கிரியையை விதிப்படி செய்கின்றவன் தான் பூசிப்பதிற் குறைவு நிறைவு வருங்கால் இதாகிதமாகிய சித்தத்தை யுடையவனுனும், கிடைத்தமட்டும் பூசித்துத் திருப்தியடைந்து அப்பூசையினிடத்திற் காமிய மனதுடையவனுனுலும், கிரியா மார்க்கத்தை முற்றுந்தெரிந்து பிறருக்கு உபதேசிக்கத்தக்கவனுனுலும், அவன் அக்கிரியைக்குப் பாத்திரவானுகமாட்டான். எவன் நிட்காமிய மனத்துடன் ஆராதனை பண்ணுகிருனே? அவனே! அக்கிரியா பூசையிற் சிறந்தவனுவான்.

---

## யோகம்.

### ஆறவது அத்தியாயம்.

யோகம்:—யோகத்திற் சரியை, யோகத்திற் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானம் என நான்குபடிகள்.

யோகத்திற் சரியை:—இயமம், நியமம், ஆதனம், பிராணுயாமம் என்பன.

---

* சிற்சத்தி, உயிர்க்கொளியாக நிற்பது. † பராசத்தி, பிராணன் முதலிய வாயுக்களாக நிற்பது. ‡ இச்சாசத்தி, பஞ்சபூதமாக நிற்பது. § ஞானசத்தி, பஞ்சேந்திரிய வுணர்ச்சியாக நிற்பது. ¶ கிரியாசத்தி, இதாவினைகட்குத் துணையாகநிற்பது.

யோகத்திற் கிரியை:—பிரத்தியாகாரம், தாரணை என்பன.

யோகத்தில் யோகம்:—தியானம்.

யோகத்தில் ஞானம்:—சமாதி.

அஷ்டாங்கயோக விதிப்படி துறவறத்தைப் பொருந்தி, சரீரத்தை மெலிந்து வாடச்செய்து, கற்பகாலம் தியானநிட்டையைப்புரிகின்ற யோகீஸ்வரனானாலும், அவன் யோகமுடிந்தவனாகான். எவன் தனது தியானசமாதியில் வைத்திருக்கிற சித்தம் வேறுபட்டலையாமற் பரிசுத்தம்பொருந்தி, அவ்விடத்திற் பொருந்தியதே! *சாட்சாத்காரமென்று உண்மையாகக் கருதுகின்றானோ அவனே பரமயோகியென்னும் கடவுள் தன்மையுடையவனாவான்.

---

## ஞானம்.

### ஏழாவது அத்தியாயம்.

ஞானம்:—ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என நான்குபடிகள்.

ஞானத்திற் சரியை:—ஆசிரியரிடம் உபதேசங்கேட்குதல்.

ஞானத்திற் கிரியை:—அங்ஙனங் கேட்டதைச் சிந்தித்தல்.

ஞானத்தில் யோகம்:—அவ்வுபதேசத்தை ஐயந்திரிபறத்தெளிதல்.

ஞானத்தில் ஞானம்:—தெளிந்தபின் நிஷ்டைகூடல்.

சகலமும் பிரம்மமயமாகச் சுருதி, குரு ¶சுவானுபவத்தால் நோக்குகின்ற ஆத்மஞானி, பிராரத்துவ வசத்தில் அணுவளவும் பேதமில்லாமற் சுயஞ்‡சைதன்யமாகப் பிரகாசிக்கின்ற மனதுடன் விளங்குவாராகில், அவரே மேலான பரமஞானியாகும்.

மேற்கூறிவந்த யோகத்திற் சரியையாகிய இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம் என்னும் நான்கின் விபரமும், யோகத்திற் கிரியையாகிய பிரத்தியாகாரம், தாரணை என்னும் இரண்டின் விபரமும், யோகத்தில் யோகமாகிய தியானத்தின் விபரமும், யோகத்தில் ஞானமாகிய சமாதியின் விபரமும், பின்வரும் அஷ்டாங்கயோக அத்தியாயத்திற் பார்த்துணர்க.

---

* சாட்சாத்காரம், கருவிகரணாதிகட் கெல்லாஞ் சாட்சியாயிருக்கின்ற சயம்புவாயிருப்பது. ¶ சுவானுபவம், சொந்த அனுபவம். ‡ சைதன்யம், சர்வேந்தரியாமியாகிய கடவுள்.

## அஷ்டாங்கயோகம்.

### எட்டாவது அத்தியாயம்.

அஷ்டாங்கயோகம்:-இஃது எட்டுவிதயோகம்; அதனாலேயே அதற்கு அஷ்டாங்கயோகம் என்று சொல்லப்படுகிறது. அவை இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பனவாம்.

இயமம்:-எவ்வுயிரையும் கொல்லாதிருத்தல், சத்தியம் தவறாமல் உண்மைபேசுதல், பிறர்பொருளைக்கவராதிருத்தல், பிறர்மனைவியரையும் பொதுமகளிரையும் விரும்பாதிருத்தல், சகலவுயிர்கள்மீதும் கருணைபாலித்தல், வஞ்சகமில்லாதிருத்தல், பொறுமையுடைத்தாயிருத்தல், துன்பம் வந்தகாலத்திலும் மனங்கலங்காதிருத்தல், அற்ப ஆகாரம்புசித்தல், சுசிகரமோடிருத்தல், என்னும் பத்துமாம்.

#### திருமந்திரம்.

கொல்லான் பொய்கூறான் களவிலா னெண்குண
நல்லான் அடக்க முடையான் நடுச்செய்ய
வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காமம்
இல்லான் இயமத் திடையில்நின் றானே.

நியமம்:—தவம்புரிதல், மனமுவந்திருத்தல், கடவுளுண்டென்னும் விசுவாசம் வைத்தல், பாவத்திற்குப் பயந்து சம்பாதித்த பொருளைச் சற்பாத்திரமா யுள்ளவர்கட்குக் கொடுத்தல், தன்னில் உயர்ந்தோரைக் கண்டால் வழிபடுதல், உயிர்கட்கு உறுதிபயக்கும் உண்மையான தத்துவநூற்களைக் கேட்டல், குலம், செல்வம், அதிகாரமுதலியவைகளினாற் செருக்கடையாமல் அடங்கியொழுகுதல், தக்கது இன்னதென்றும் தகாதது இன்னதென்றும் பகுத்தறிதல், செபம், விரதம் என்னும் பத்துவிதக் கிருத்தியங்களாம்.

#### திருமந்திரம்.

தூய்மை யருளூண் சுருக்கம் பொறை செம்மை
வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை
காமங் களவு கொலையெனக் காண்பவை
நேமியீ ரைந்து நியமத்த னாமே.

ஆதனம்: — சித்தாசனம், சிங்காசனம், சுவத்திகாசனம், சௌவியாசனம், சூலாசனம், சுகாசனம், சருவதோபத்திராசனம், கோமுகாசனம், கருடாசனம், மயூராசனம், மச்சேந்திராசனம், மற்சாசனம், முற்காசனம், மண்டூகாசனம், மிருகாசனம்: நாகாசனம், குக்குடாசனம், குஞ்சராசனம், கூர்மாசனம், காஷ்டாசனம், கிரவுஞ்சாசனம், கடகாசனம், காமதகனசனம், யோனியாசனம், வியாக்கிராசனம், வைநிகாசனம், வத்திராசனம், வாசவாசனம், வீராசனம், வராகாசனம், பரியங்காசனம், பதுமாசனம், பதாசனம், பச்சிமத்தானசனம், திரிபதாசனம், அத்தனுசனம், அயிம்மாசனம், அர்த்தாசனம் என முப்பத்தெட்டாசன பேதங்கள். இவ்வாசனங்கள், வசிட்டர், மச்சேந்திரர் முதலிய மகான்களால் எண்பத்துநான்கு ஆசனபேதங்கள் என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளை எழுதப்புகுந்தாற் சாஸ்திரம் அதிக விரிவாகிவிடுமென் றெண்ணிச் சில யுக்தமான ஆசனங்களின் விபரத்தைமட்டிலும் இதன்கீழ் எழுதலாயிற்று.

இக்காலத்தில் யோகிகள் அநுஷ்டானத்திற் கொண்டுவரப்பட்ட சிறந்த ஆசனங்கள் ஒன்பதுவகை. அவை சுவத்திகம். கோமுகம், பதுமம், வீரம், கேசரி, பத்திரம், முத்தம், மயூரம், சுகம் என்னும் ஆசனங்களாம். அவை பின்வருமாறு:—

சுவத்திகாசனம்: — தொடைக்கும் முழந்தாளுக்கும் மத்தியில் இரண்டுபாதங்களையும் செலுத்திச் சரீரத்தை நிமிர்ந்திருக்க வைத்து இருமாப்புற்றிருத்தல்.

கோமுகாசனம்:—ஆசனபக்கத்தில் இரண்டுகாலின் பாட்டையும் மாறவைத்து இரண்டு காற்பெருவிரலையும் கையினாற் பிடித்துக்கொண்டிருத்தல். இவ்வாசனம்மூலபந்தத்தால் அபான சித்தியைத் தருவதுடன் பகந்தரமென்னும் குதநோயையும் தவிர்க்கும். இது, கோமுகம்போன்றிருப்பதாற் கோமுகாசனமெனக் கூறப்படுகின்றது.

பதுமாசனம்:—வலது பாதத்தை இடது தொடையின்மீதும், இடதுபாதத்தை வலது தொடையின்மீதும் வைத்து இரண்டு பாதங்களையும் ஆகாயத்தைப்பார்க்கும்படி வைத்திருப்பது.

வீராசனம்:—வலதுபாதத்தை இடதுதொடையிலும் இடது பாதத்தை வலதுதொடையிலும் வைத்து இருமாப்புற்றிருத்தல்.

சிம்மாசனம்:—பரடுகளிரண்டையும் பீசத்தின் கீழ்ப்பாகத்திலுள்ள நரம்பின் இருபக்கங்களிலும் சேர்க்கவேண்டும். அஃதாவது வலப்புறத்தில் இடதுகாற் பரட்டையும் இடப்புறத்தில் வலதுகாற் பரட்டையும் சேர்த்து நாசிநுனியை நோக்கி முழந்தாளிற் கைகளை நீட்டியிருத்தல்.

பத்திராசனம்:—பீசத்தின்கீழ் ஆசனப்பக்கத்தில் இருகாற் பரட்டையும் வைத்து இருகாலையும் இருகரத்தாலிறுகப் பிடித்து அசையாது முழந்தாளிற் கைகளைநீட்டி யிருமாந்திருத்தல்.

முத்தாசனம்:—இடக்காற்பரட்டினுல் சீவனியை அழுத்தி வலக்காற் பரட்டை இடக்காற்பரட்டின்கீழ் உந்தவிருத்தல்.

மயூராசனம்:—முழங்கையிரண்டும் உந்திப்புறத்தில் அழுந்தப் புவியிற் கையையூன்றிக் காலைநீட்டித் தலைநிமிர்ந்திருத்தல்.

சுகாசனம்:—சுகமுந் திடமும் எவ்வாறிருக்கின் எய்துமோ அவ்வாறு இருத்தல்.

திருமந்திரம், பதுமாசனம்.

ஓர ணைப்பத மூருவின் மேலேறிட்
டார வலித்ததன் மேல்வைத் தழகுறச்
சீர்திகழ் கைக ளதனைத்தன் மேல்வைக்கப்
பார்திகழ் பத்மா சனமென லாகுமே.

பத்திராசனம்.

துரிசில் வலக்காலைத் தோன்றமேல் வைத்து
அரிய முழந்தாளி லங்கை களைநீட்டி
உருகி யிடுமுடற் செவ்வே யிருத்திப்
பரிசு பெறுமது பத்திரா சனமே.

சிங்காதனம்.

பாத முழந்தாளிற் பாணி களைநீட்டி
ஆதர வோடும்வா யங்காந் தழகுறக்
கோதில் நயனங் கொடிமூக்கி லேயுறச்
சீர்திகழ் சிங்கா தனமென லாமே.

மேற்சொல்லிவந்த உசிதமான நவாதனங்களாற் பற்பலவியாதிகள் வராமல் தடுக்கப்படுகின்றது. இதற்காகவே, ஆதனங்களை அவசியமென்று முன்னோர்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

பிராணாயாமம்:—இஃது பிராணவாயுவை பூரக, கும்பக, இரேசகஞ்செய்தல்; இதன் விபரம் பிராணாயாமயோக அத்தியாயத்தில் பார்த்து நன்குணர்க. அதற்கு உதாரணம்.

திருமந்திரம்.

வளியினை வாங்கி வயத்தி லடக்கிற்
பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம்
தெளியக் குருவின் றிருவருள் பெற்றால்
வளியினும் வேட்டு வளியனு மாமே.

ஏற்றி யிறக்கி யிருகாலும் பூரிக்குங்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது மாமே.

பிரத்தியாகாரம்:—உபாதியை நீக்கி உள்நோக்கல்.

திருமந்திரம்.

நாபிக்குங் கீழே பன்னிரண் டங்குலந்
தாபிக்கும் மந்திரந் தன்னை யறிகிலர்
தாபிக்கும் மந்திரந் தன்னை யறிந்தபின்
கூவிக்கொண் டீசன் குடிபுகுந் தானே.

மூலத் திருவிரல் மேலுக்கு முன்னின்ற
பாலித்தயோனிக் கிருவிரற் கீழ்நின்ற
கோலித்த குண்டலி யுள்ளே செழுஞ்சுடர்
ஞாலத்து நாபிக்கு நால்விரற் கீழே.

நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலம்
நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல்
மாசித்தி மாயோகம் வந்து தலைப்பெய்தும்
தேகத்துக் கென்றுஞ் சிதைவில்லை யாகுமே.

மூலத் துவாரத்தை முக்கார மிட்டிரு
மேலத் துவாரத்தின் மேல்மனம் வைத்திரு
வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு
காலத்தை வெல்லுங் கருத்திது தானே.

